

உ

சிவ சிவ

# திருவாண்டார் கோவில்

என்கிற

## திருவடுகூர்க் கோயில்

## தல வரலாறு

**மகா கும்பாபிஷேக வெளியீடு**

**4—2—1991**

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21-வது அதிபர்

கயிலைமாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

அவர்களின்

அருளாணையின் வண்ணம் வெளியிடப் பெற்றது.

ஸ்ரீ திரிபுரசுந்தரி சமேத ஸ்ரீ பஞ்சநதீஸ்வரர்

தேவஸ்தானம்

திருவாண்டார் கோவில்

இந்நூலுக்கு அணிந்துரை எழுதி உதவிய இந்துசமய நிறுவனங்கள் ஆணையர் திரு அ. சு. இராமமூர்த்தி அவர்கட்கும், நூல் அச்சிடுங்கால் அச்சுப்படிகளை நோக்கிப் பிழை திருத்தம் செய்து தந்த புலவர் திரு பொன். முருகையன், புலவர் பனசை சுவாமிநாதன் எம். ஏ; எம். பில் ஆகியவர்கட்கும் செந்திலாண்டவன் திருவருள் மல்குக.

இந்நூலுக்கு வாழ்த்துரை வழங்கியருளி நூல் வெளியிடும் பணியில் அடியேனை ஈடுபடுத்தியருளிய ஸ்ரீ காசிமடம் அதிபர் கயிலைமாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கட்கு என் மனமொழி மெய்களால் ஆகிய வணக்கங்களைச் செலுத்திக் கொள்கின்றேன்.

இங்ஙனம்

ஸ்ரீ காசிமடம்
4—2—1991

அர. சிவப்பிரகாசம்
திருப்பனந்தாள்





உ

சிவ சிவ

கயிலைமாமுனிவர்
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்
சுவாமிகள் அவர்கள்
அதிபர், ஸ்ரீ காசிமடம்

திருப்பனந்தாள்
தஞ்சை மாவட்டம்
15—11—1990

# வாழ்த்துரை

"நாடும் நகரமும் நற்றிருக்கோயிலும் தேடித் திரிந்து சிவபெருமானென்று பாடுமின் பாடிப் பணிமின்" என்னும் வாக்கிற் கிணங்கத் திருக்கோயிலுக்குச் செய்யும் திருப்பணிகள் யாவும் இறைவனுக்குச் செய்யும் பணிகளேயாகும். பாடல்பெற்றதலமாகிய திருவாண்டார் கோயில் என வழங்கப்படுகிற திருவடுகூர்த் திருக்கோயிலுக்குத் திருப்பணிகள் செய்து 4—2—1991 அன்று மகாகும்பாபிஷேகம் நடைபெறுவது அறிந்து மகிழ்கின்றோம்.

தற்காலத்தில் வழிபாட்டிற்கு வரும் அன்பர்கள் பலரும் தலத்தின் பெருமைகளை உணர முடியாமல் செல்லும் நிலை ஏற்படுகிறது. இக்குறை நீங்கும் வகையில் இத்தலத்தின் வரலாறு அமைந்த நூல் ஒன்று கும்பாபிஷேகநாளன்று வெளியிட்டருளுமாறு வேண்டியதற்கிணங்க வெளியிடப்படும் இந்நூலினை அன்பர்கள் பலரும் பெற்று இறைவன் திருவருள் நலம் பெறுவார்களாக.

மகாகும்பாபிஷேகம் சிறப்புற நடைபெறவும் நூல் வெளியீடு இனிதே நிகழவும் செந்திற்கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

சுபம்

சிவ சிவ

அ. சு. இராமமூர்த்தி,
ஆணையர், இந்து சமய நிறுவனங்கள்

புதுவை
நாள்:

# அணிந்துரை

"தென்னாடுடைய சிவனே போற்றி-எந்நாட்டவருக்கும் இறைவா போற்றி'' என்றார் மணிவாசகப் பெருமான். தமிழகத்தைச் சார்ந்த புதுவை நகர், மண்ணாடிப்பட்டு கொம்யூன், திருவாண்டார் கோவிலில் அமைந்துள்ள ஸ்ரீ திரிபுரசுந்தரி சமேத பஞ்சநதீஸ்வரர் ஆலயம் மிகப் பழமையும் பெருமையும் வாய்ந்த ஆலயமாகும். சமயக் குரவர் நால்வருள் திருஞானசம்பந்தர் அவர்கள் தமது தேவாரத் திருப்பதிகத்திலும், அருணகிரிநாதர் தமது திருப்புகழிலும் இதன் பெருமையைச் செப்புகின்றனர். இத்திருக்கோயிலைப் பற்றி பக்தர்கள் அனைவரும் அறிந்து கொள்ள அறங்காவல் குழுவினர் மிகவும் விரிவாகவும், தெளிவாகவும் இவ்வரலாற்றுப் புத்தகத்தை அழகாக வடித்துக் கொடுத்துள்ளனர்.

பக்தி நெறியைப் பரப்புவதற்கும் நாம் எடுத்த பிறவிப் பயனை உய்ப்பதற்கும் ஆலயம் தொழுவது சாலவும் நன்றாகும். இப்பொழுது வெளியிடப்படுகின்ற இத்திருக்கோயில் வரலாற்று நூல் நம் அனைவருக்கும் ஒரு வழி காட்டியாக அமைவதால் அதை வாங்கிப் படித்து இறைவழிபாடு மூலம் மனநலம், உடல்நலம் மற்றும் எல்லாவற்றையும் பெற்று இம்மை, மறுமைப் பயன் பெற எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகின்றேன்.

அ. சு. இராமமூர்த்தி

# பஞ்சநதீஸ்வரர் கோயில், திருவாண்டார் கோயில்

(தொல்பொருள் ஆய்வுத் துறையினர்)

இன்று தனியூராக விளங்கும் திருவாண்டார் கோயில், சோழர் காலத்தில் திரிபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலம் எனும் பேரூரின் ஒரு பகுதியாகத் திகழ்ந்திருந்தது. திரிபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலம் என்பது முதலாம் பராந்தகச் சோழனின் அரசியருள் ஒருத்தியான திரிபுவன மாதேவியின் பெயரால் வேதம் வல்ல அந்தணர்களுக்குப் பிரமதேயமாக வழங்கப்பட்ட ஊராகும். இச்சதுர்வேதி மங்கலம் பரகேசரிநல்லூர், திருமங்கலம், புள்ள மங்கலம், திருவக்கரை, திருக்குண்டாங்குழி, திருவடுவூர் போன்ற பல்வேறு சிற்றூர்களைத் தன்னகத்தே கொண்டு திகழ்ந்திருந்தது.

தற்போது வழங்கப்படும் திருவாண்டார்கோயில் எனும்பெயர் இவ்வூருக்கு எவ்வாறு, எப்போது வந்தது என்பது ஆய்வுக் குரியதாகும். மூதன்முதலாக கி. பி. 16-ஆம் நூற்றுண்டைச் சார்ந்த சாளுவ நரசிங்க மகாராசனின் தெலுங்குக் கல்வெட்டு ஒன்றில் இவ்வூர் சிவபெருமான் 'திருவாண்டார்' என்று குறிக்கப் பெறுகிறுர். 'திருவறை ஆண்டார்' என்று சோழர் காலத்துச் சாசனங்களில் இறைவனைக் குறிப்பிடும் பெயரே பின்னர் மருவித் 'திருவாண்டார்' என்று வழங்கியதாகக் கொள்ளலாம். 16-ஆம் நூற்றுண்டில் இறைவனுக்குப் பெயராக வழங்கி வந்த 'திருவாண்டார்' என்னும் பெயர், பின்னர் 'திருவாண்டார் கோயில்' என்று ஊருக்கும் பேராயிற்று.

பஞ்ச நதீஸ்வரர் அல்லது சந்திர மௌளீசுவரர் என்று அழைக்கப்பெறும் திருவாண்டார் கோயில் சிவ பெருமானுக்கு 'வடுக நாதர்' என்றெரு பெயரும் இருப்பதாகக் கூறுவர் வடுகனுகிய வைரவர் இத்தலத்தில் வழிபாடு நிகழ்த்திப் பேறு பெற்ற காரணம் பற்றி இப்பெயர் வந்ததாக மரபு வழிச் செய்தி யொன்று பகர்கிறது. இது மட்டுமன்றிச் சோழர் காலத்துச் சாசனங்களில்-திருவறைநக்கன் கோயில் பரமஸ்வாமி, திருவறையா ளும் பரமஸ்வாமி, திருவறையுடைய மகாதேவர் எனவும், 15-16-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளில் திருவாண்டார். திருவையாறுடைய

நாயனர் என்றும் இவ்விறைவன் குறிப்பிடப்பெறுகிருர். திருஞான சம்பந்தரால் குறிப்பிடப்படும் 'வடுகூர் அடிகள்' இக்கோயில் இறைவனாக இருக்கலாம் எனச் சில அறிஞர்கள் கருதுகின்றனர். ஆயினும் அதனை நிரூபிக்கப் போதுமான தடயங்கள் இன்மையால் உறுதியாகக் கூற இயலாது.

இக்கோயிலில் கிடைத்துள்ள மிகத் தொன்மையான கல்வெட்டு முதலாம் பராந்தகச் சோழன் காலத்தினைச் சார்ந்ததாகும். இக்கல்வெட்டுகளைக் கொண்டும், கோயிலின் கட்டட அமைப்பினைக் கொண்டும் இக்கோயில் முதலாம் பராந்தகச் சோழன் காலத்தினைச் சார்ந்தது என உய்த்துணரலாம். பராந்தகனையடுத்து முதலாம் இராசராச சோழன். முதலாம் இராசேந்திர சோழன், முதலாம குலோத்துங்க சோழன். போன்ற மன்னர்களின கலவெட்டுகளும, விசயநகர வேந்தனாண் விருப்பன்ன உடையார், வீரபுக்கர், வீரபபிரதாப கிருஷ்ணதேவ மகாராயர். சாளுவ நரசிங்க மகாராாசர் ஆகியோரது கல்வெட்டுகளும் இக் கோயிலில் பொறிக்கப்பட்டுள்ளன. அது மட்டுமன்றி மிகவும் சிதைந்த நிலையில் முதலாம் ஆதித்த சோழனின் 5-ஆவது ஆட்சியாண்டைச் சாாந்ததாகக் கருதப்படும் மற்ருெரு கல்வெட்டும் இங்கு உள்ளது.

கிழக்கு நோக்கியவாறு அமைக்கப்பட்டுள்ள இச்சிவன் கோயில் சதுரவடிவான கருவறையையும், நீள்சதுரவடிவ அர்த்த மண்டபத்தினையும் கொண்டுள்ளது. வெளிமண்டபம் பிற்காலத்தியது. சுமார் 5 அடி உயரமுள்ள கோயில் அதிட்டானம்-உபானம், ஜகதி, முப்பட்டை குமுதம், கம்பு, கண்டம், கம்பு, பட்டிகை ஆகிய உறுப்புகளைக் கொண்டது. கருவறைச் சுவரிலுள்ள தேவ கோட்டங்களில் தெற்கே தட்சணுமூர்த்தி தேவர், மேற்கே இலிங்கோத்பவர், வடக்கே பிரம்மா ஆகியோரின் சிலைகள் இடம் பெற்றுள்ளன. அர்த்த மண்டபத்துக் கோட்டங்களில் தெற்கே பிக்ஷாடனரும், வடக்கே துர்க்கையும் காணப்படுகின்றனர். வேறு சில கோட்டங்களைக் கணேசர், அர்த்தநாரீஸ்வரர், இடபாரூடர் முதலானேரின் சிலைகள் அலங்கரிக்கின்றன. தட்சணுமூர்த்தி, பிக்ஷாடனர், துர்க்கை, பிரம்மா போன்ற சிலைகள் கோயிலின் சம காலத்தவை. கணேசர், அர்த்தநாரி, இடபாரூடர் ஆகிய சிலைகள் காலத்தால் சிறிது பிற்பட்டவை. தேவ கோட்டங்களின் இருமருங்கிலும் அரைத்தூண்களும் அவைகளின் மேல் தோரணங்களும் அமைந்துள்ளன.

**தட்சணாமூர்த்தி:**

யோகத்தையும், ஞானத்தையும் போதிக்கும் ஆசிரியனாக இறைவன் ஒருகால் மேல் இன்னொரு காலைக் குறுக்கே வைத்து உயர்ந்த மேடையில் அமர்ந்து காட்சியளிக்கின்றார். மேலிரண்டு கைகளில் ருத்திராட்சமாலையும், தீயும் இருக்கின்றன. கீழ் இரண்டு கைகளில் வலக்கை யோக முத்திரை காட்டுகிறது. இடக்கை பனை ஓலை பற்றியுள்ளது.

**இலிங்கோத்பவர்:**

அடிமுடி காண இயலா அண்ணலாக, ஒளிப் பிழம்பாகக் காட்சியளிக்கும் இலிங்கத்திலிருந்து சிவபெருமான் வெளிப்படும் தோற்றம் கீழ் ''அடி தேடி அறிவல்' எனச் சென்ற வராகம் வடிவில் திருமால், 'மேலே முடிதேடி முன்வருவல்' என முனைந்த அன்னம் வடிவில் நான்முகன் ஆகியவற்றுடன் லிங்கோத்பவ மூர்த்தியின் சிலை காட்சியளிக்கிறது.

**பிரம்மா:**

தலையில் சடா மகுடம் திகழ நான்கு முகங்களுடன், பிரம்மா திகழ்கிறார். அவரது நான்கு கைகள் மேல் கைகளில் கடமும், ருத்திராட்ச மாலையும் விளங்கவும், கீழ்வலக்கையை அபய ஹஸ்த மாகவும், கீழ் இடக்கையைத் துடைமீது வைத்தவாறும் அமைந் துள்ளன அவரது காதுகளில் குண்டலங்களும், மார்பில் ஆரமும், இடத் தோளில் குறுக்காகப் பூணூலும் அலங்கரிக்கின்றன. இச்சிலை பராந்தகன் காலத்துச் சிற்பத் திறமைக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

**பிக்ஷாடன மூர்த்தி:**

இறைவன் இரந்துண்பானாய் நான்கு கைகளைக் கொண்டிருக் கிறான். மேலிரண்டு கைகளில் ஒருகையில் மழுவினைக் கொண்டுள் ளான். கீழுள்ள வலக்கையால துள்ளும் மானை நோக்கிக் கைகாட்டுகிறான். இடக்கையில் கபாலத்தை வைத்துள்ளான். இடப்பக்கத்தில் குள்ள பூதகணம் ஒன்று இரந்துண்ணும் ஓடு ஒன்றைத் தலையில் கொண்டுள்ளது. அண்ணலின் இடுப்பில் பாம்பாலான அரைஞாண் திகழ்கிறது.

**துர்க்கை:**

மகிடாசுரன் தலைமீது நின்ற திருக்கோலத்தில் துர்க்கை காட்சியளிக்கிறாள். எட்டுகைகளுடன் தோற்றமளிக்கும் தேவியின்

முன் வலக்கை அபய ஹஸ்தமாக உள்ளது. முன் இடக்கை தொடையின் மீது வைத்துள்ளாள். ஏனைய கைகளில் சக்கரம், வாள், அம்பு, சங்கு, கேடயம், வில் ஆகியவற்றைப் பற்றியுள்ளாள். நல்ல உயரத்துடனும், மென்மையுடனும், நல்லுடையும் சிறந்த ஆபரணங்களும் கொண்டு மிளிரும் இத்துர்க்கையின் சிலை சிற்பத்திறமைக்கு ஓர் சிறந்த உதாரணமாகும்.

**ரிஷபாந்திக மூர்த்தி:**

சடைமுடி அண்ணலும் மலையவன் மகளும் ஒருவரையொருவர் அணைத்தபடி காளையின்மேல் ஒருகை ஊன்றி நிற்பதனை மிகவும் தத்ரூபமாகக் கல்லில் வடிக்கப்பட்டுள்ளது. அன்றலர்ந்த தாமரை போல் புன்முறுவல் பூக்கும் தேவியின் முகமும், அண்ணலின் கம்பீரப் பார்வையும், அவர்கள் அணிந்துள்ள அணி கலன்களின் வனப்பும் காண்போர் கண்ணையும் கருத்தையும் கவரவல்லதாகும்.

கோயிலில் உள்ள தூண்களும், அரைத்தூண்களும் மூலஸ்தானம், பத்மபந்தம், கலசம், தாடி, கும்பம், பாலி, பலகை போன்ற உறுப்புகளையும், அதன்மேல் போதிகையினையும் கொண்டுள்ளன. இவை முற்கால சோழர் கட்டடக்கலையின் சிறந்த உதாரண மாகும். கொடுங்கையின் கீழ் பூதகண வரிசையும், மேலே யாளி வரிமானத்தையும் காணலாம். கோயிலின் விமானம் மூன்று தளங்களைக் கொண்டது. ஒவ்வொரு தளமும் சாலை, கூடம் ஆகிய பகுதிகளைக் கொண்டு அமைந்துள்ளன. கீரிவம் வட்ட வடிவ மானது. கீரிவத்தில் அழகிய கூடுகளோடு கூடிய கோட்டங்கள் நாற்றிசைகளையும் நோக்கியவாறு அமைந்துள்ளன. கீரிவத்தின் மேல் வட்ட வடிவ சிகரமும் கலசமும் உள்ளன. இவையாவும் பிற்காலத்தில் சுதையாலும், செங்கல்லாலும் கட்டப்பட்டவை யாகும்.

வடுவகிர்க்கண்ணி அம்மையான இறைவியின் திருக்கோயில் கி. பி. 10-ஆம் நூற்றுண்டுக்குப் பின்னர், சிவன்கோயிலின் திருச்சுற்றுக்கு வெளியே, தெற்கு நோக்கியவாறு நிறுவப் பட்டிருந்தது. இன்று அக்கற்றளியின் சுவடுகளை மட்டுமே காண்கிறோம். கல்வெட்டுகளில் அம்மனைப் பற்றிய குறிப்பு எதுவும் இல்லை. பரிவார ஆலயங்களில் ஒன்றுன குமாரசுவாமியின் கோயில், அப்பண்ண பிள்ளை மகனான பிழை பொறுத்த பிள்ளை என்பவரால் கட்டப்பட்டதாகும்.

இக்கோயிலின் கலை மேம்பாடு மற்றும் வரலாற்று முக்கியத்துவம் கருதி இதனைப் பாதுகாத்து வரும் சந்ததியினரும இதன் மேன்மையினை அறியும் வண்ணம் இந்தியத் தொல்பொருள் ஆய்வுத்துறை இக்கோயிலைத் தனது பராமரிப்பின் கீழ் எடுத்துக் கொண்டது. இதேபோன்று பாண்டிச்சேரி மாநிலத்தில் உள்ள திருபுவனி, மதகடிப்பட்டு, பாகூர் ஆகிய இடங்களில் உள்ள கோயில்களும், அரிக்கமேடு எனும் இடத்தில் உள்ள புராதனச சின்னமும் இத்துறையின் மேற்பார்வையின் கீழ்க் கொணர்ந்து பல்வேறு பராமரிப்புப் பணிகள் மேற் கொள்ளப்பட்டுள்ளன. பொதுவாக இந்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறையின் பணிமுழுவதும் இத்துறையின் பொறியியல் மற்றும் வேதியியலில் தனிப்பயிற்சி பெற்ற அலுவலர்களால் சிறப்பாக மேற் கொள்ளப் பட்டுத் திறமை வாய்ந்தவர்களால் வழிகாட்டப்படுகிறது. புராதன சின்னங்களின் பழமை தோற்றத்திற்கு எந்தவிதமான ஊறும ஏற்படாமல் அது எவ்வாறு இருந்ததோ அவ்வாறே அதனைப் பாதுகாப்பதே இத்துறையின் முக்கியக் குறிக்கோளாகும்.

பஞ்சநதீஸ்வரர் ஆலயத்தில் பல்வேறு பராமரிப்புப் பணிகள் இத்துறையினரால மேற்கொள்ளப்பட்டுச் செவ்வனே நிறை வேற்றப்பட்டுள்ளன. இக்கோயிலின் மகா மண்டபத்தின் சுவர்களின் கடைக்கால் பழுதடைந்ததால் சுவர் செங்குத்தாக இல்லாமல் சிறிது சாய்ந்து எந்தநேரத்தில் விழுமோ என்ற அபாயத்தில் இருந்தது. மேலும் இம்மண்டபத்தின் கூரையில் விரிசல்கள் ஏற்பட்டு மழைக்காலத்தில் நீர்க் கசிவு ஏற்படலாயிற்று. எனவே கூரையினையும், சுவர்களையும் பிரித்து அதற்கு வலுவூட்டி எந்தவித மாறுபாடும் இன்றித் திரும்பிக் கட்டும் பணியை அண்மையில் இந்திய தொல்பொருள் ஆய்வுத்துறை மேற்கொண்டது. இவ்வாறு சுவர்களைப் பிரிப்பதற்குமுன் அதன் கற்கள் ஒவ்வொன்றின் மேலும் வரிசை கிரமமாக எண்கள் இடுவர். பின் சுவர் முழுவதுமாகத் தாளில் வரைந்து கொண்டு அதில் வரிசை, வரிசையாகக் கட்டப்பட்டுள்ள கற்களின் அமைப்பினையும், அதன்மேல் இடப்பட்டுள்ள எண்களையும் குறித்துக்கொள்வர். எண்கள் இட்ட பின் சுவர்களைப் புகைப்படமும் எடுத்துக் கொள்வர். இவ்வாறு எடுக்கப்படும் புகைப்படமும், வரைபடமும் சுவரைத் திருப்பிக் கட்டும் போது எந்தவித மாற்றமும் இல்லாமல் அந்த அந்த கற்கள் அந்த அந்த இடத்திலேயே பொருத்தப் பெரிதும் உதவியாக இருக்கும். பின் கற்களை வரிசை வரிசையாகப் பிரித்து வரிசைக் கிரமமாக அடுக்கிவைப்பர். கடைக்காலும் அவ்வாறே அகற்றுவர். இவ்வாறு கடைக்கால் கற்களை எடுக்கும் போது

மகாமண்பத்தின் கிழக்கு வாசலின் கீழ் சுமார் 1.20 மீட்டர் ஆழத்தில் இரண்டு அரிய செப்புத் திருமேனிகள் கிடைத்தன. கி.பி 11-ஆம் நூற்றாண்டு எனக் கருதப்படும் இச்சிலைகளில் ஒன்று சிவகாமி அம்மை, மற்றது பிரதோஷண மூர்த்தி சிவன். சிவகாமி அம்மையின் சிலை சுமார் 67 செ.மீ உயரமும, சிவன் சிலை 37 செ.மீ உயரமும் கொண்டது. தாமரை பீடத்தின் மீது நின்ற திருக்கோலத்தில் தேவி காட்சியளிக்கிறாள். அவளுடைய ஒருகை மலரைப்பற்றியவாறு அமைந்துள்ளது. கரண்ட மகுடம் தரித்துள்ள தேவியின் காதுகளில் மகர குண்டலங்களும், கழுத்தில் பல்வேறு ஆரங்களும் மிளிர்கின்றன. பிரதோஷண மூர்த்தியான சிவன் நான்கு கரங்களைக் கொண்டு நேராக (சமபங்கம்) நிற்பதாக வடிக்கப்பட்டுள்ளார். அவரது மேலிரு கரங்களில் மானும், மழுவுமுடன், கீழ்வலக்கை அபய ஹஸ்தமாகவும், கீழ் இடக்கை தொடையின் மீது வைத்தவாறும் அமைக்கப் பட்டுள்ளன. காதில் குண்டலங்களும், மார்பில் ஆரமும், வயிற்றில் உதரபந்தமும், அழகிய சடைமுடியும், நேர்த்தியான ஆடைகளையும் கொண்டு காட்சியளிக்கும் அண்ணலின் சிலை சோழர் காலச் செப்புத் திருமேனிக்கு ஓர் சிறந்த எடுத்துக்காட்டு எனலாம். இறைவனைச் சுற்றி பிரபா காணப்படுகிறது.

கட்டடமும் கடைக்காலும் பிரிக்கப்பட்டபின், கடைக்கால் மிக உறுதியாக அமைக்கப்பட்டது. அதன்மேல் முன்பு இருந்தது போலவே பிரித்த கற்களைக் கொண்டு சுவர் எழுப்பப்பட்டன. பழுதடைந்து உடைந்து விழும் நிலையில் இருந்த கல் உத்திரங்களை அகற்றிவிட்டு அதே போன்று கல் உத்திரங்கள் செய்து பொருத் தப்பட்டன. மகா மண்டபத்தின் கூரையின் எந்த இடத்தில் விரிசல்கள் இருந்ததோ அந்த இடங்களைப் பழுது பார்த்து நீர்க் கசிவு தடுக்கப்பட்டது. அது மட்டுமன்றி விமானத்தின் அழகினைக் குலைக்கும் வண்ணம் அதன் மேல் படர்ந்திருந்த ஒருசெல் தாவரங்களான மாஸ், பங்கஸ் போன்றவைகளையும், பெரிய செடி களையும் அகற்றப்பட்டு, மேலும் அவைகள் வளராமல் தடுக்க இரசாயனப் பூச்சு அளிக்கப்பட்டது.

மேலும் இக்கோயிலில் இந்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறையின பணியாளர்களை வேலையில் அமர்த்தி அதன் சுற்றுப் புறச் சூழல் சுத்தமாக வைத்துக் கொள்ளவும், சுவர்களிலும், விமானத்தின்மேலும் வளரும் செடிகளை அப்போதைக்கு அப்போது அகற்றவும் ஆவன செய்யப்பட்டு வருகிறது.

முருகன் துணை

# முன்னுரை

**திருச்சிற்றம்பலம்**

**அண்ணல் ஆலவாய், நண்ணி னான்தனை**
**எண்ணி யேதொழத், திண்ணம் இன்பமே.**

—திருஞானசம்பந்தர்

தேவாரப் பாடல்பெற்ற சிவத்தலங்களில் நடுநாட்டில் இருபத்திரண்டு தலங்கள் உள்ளன. அத்தலங்களுள் பதினாறாவது திருத்தலமாக விளங்குவது திருவடுகூராகும். இத்திருவடுகூர் தற்பொழுது திரு ஆண்டார் கோயில் என வழங்கப்படுகிறது. இத்திரு ஆண்டார் கோயில் புதுச்சேரி மாநிலத்தில் மண்ணாடிப்பட்டு கொம்யூனில் உள்ளது. புதுச்சேரியிலிருந்து விழுப்புரம் செல்லும் பேருந்துப் பாதையின் வடபால் சோலைகளும் பசுமை நிறை வயல்களும் தண்மை நிறை வாவிகளும் அமையப்பெற்றுள்ளன. சாலையை ஒட்டியே இக்கோயில் அமைந்துள்ளது. இக்கோயில் தற்பொழுது தொல்பொருள் ஆய்வுத் துறையினரின் பாதுகாப்பில் உள்ளது. இக்கோயில் வடுகபைரவர் வழிபட்ட கோயிலாகும். இத்தலத்தின் பெருமையைத்திருஞானசம்பந்தர் அருளிய அரியதொரு தேவாரத் திருப்பதிகமும், அருணகிரிநாதர் அருளிய அழகியதொரு திருப்புகழும் செப்புகின்றன.

தருமையாதீனம் ஸ்ரீல ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் ஜன்ம நட்சத்திரவிழா (இரக்தாக்ஷி - மாசி - ஆயில்யம்) இத்தலத்தில் நிகழ்கிறது. இத்தருமையாதீனம் இருபத்தைந்தாவது குருமகா சந்நிதானம் ஸ்ரீல ஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் தங்கள் ஜன்ம நட்சத்திர நாட்களில் பாடல்பெற்ற சிவத்தலங்கள் தோறும் வழிபாடுகள் நிகழ்த்தி, அன்பர்கள் பலரையும் இறையருட் சிந்தனையில் ஈடுபடுத்தியருளியது போன்று அவர்களது அருளாட்சி முறைகளைப் பின்பற்றி இருபத்தாறாவது குருமணியாக இருக்கும் ஸ்ரீல ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளும், தங்கள் ஜன்ம நட்சத்திர விழாநாட்களில் தேவாரப் பாடல்பெற்ற சிவத்தலங்களில் சிறப்பு வழிபாடுகள் நிகழ்த்தி அன்பர்கள் பலரையும் இறைவழிபாட்டு நெறிகளில் ஈடுபடுத்தி அருள்கின்றார்கள்.

சுவாமி, அம்பாள்மற்றும் முக்கிய மூர்த்திகளுக்கு அபிடேக, அர்ச்சனை, ஆராதனைகள் நடைபெறுகின்றன. தலத்திருப்பதிகங்கள் அச்சிட்டு வழங்கப்பெறுகின்றன. சமய விரிவுரைகள் நிகழ்கின்றன. அன்பர்கள் பலரும் விழாவில் கலந்துகொண்டு திருவருளையும் குருவருளையும் பெற்று இன்புறுவார்களாக.

வாழ்க தருமைக் குருமணி!
வளர்க சமயப்பணி!



அருள்மிகு வடுகநாதர்

குருபாதம்

# தருமையாதீனத்தை நிறுவியருளிய ஸ்ரீ குருஞான சம்பந்தர்

# அருள் வரலாறு

சீரணியும் நுதலின்விழி மழுமான் நாகம்
திருந்துமெரி பொருந்துவிடம் தெரிந்திடாமல்
தாரணி அன்பரைஆள அவர்போல் வந்த
சைவசிகாமணி எவர்க்கும் தலைவன் எங்கோன்
காரணியும் நொடியபொழிற் கமலை வேந்தன்
கருணைமழை பொழியும்இரு கடைக்க ணாளன்
பரணியும் ஞானசம் பந்தன் எந்தை
பரமன் இரு சரணமலர் பரவி வாழ்வாம்.

- ஸ்ரீ சம்பந்த சரணாலயர்.

தமிழ் நாட்டில் உள்ள திருவில்லிபுத்தூரில் கார்காத்த வேளாளர் குலத்தில் சுப்பிரமணியப் பிள்ளைக்கும் மீனாட்சியம்மைக்கும் அருந்தவப் புதல்வனாய் அவதரித்தவரே ஸ்ரீ குரு ஞானசம்பந்தர். இவர் தம் பெற்றோருடன் மதுரையம் பதிக்குச் சென்று குலதெய்வமாகிய ஸ்ரீ சொக்கநாதப் பெருமானை வழிபட்டார். முன்செய்த திருவருளால் பொற்றாமரைக் குளத்தின் ஈசான மூலையில் பெட்டகக் கோயிலுடன் ஸ்ரீ சொக்கநாதப் பெருமான் கண்ணுக்கினிய பொருளாகக் காட்சியளிக்கப் பெற்றார். சொக்கநாதப் பெருமானின் அருளால் திருவாரூர் சென்று ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிகரைக் கண்டுவணங்கிச்சிவஞானோபதேசம் பெற்றார். அத்துடன் சொக்கநாதர் பூஜையும் எழுந்தருளச்செய்து கொடுக்கப் பெற்றார். தம் குருவாணையின்படியே தருமபுரத்தில் அமர்ந்து பக்குவான்மாக்களுக்கு ஞானோபதேசம் செய்து சைவ சித்தாந்தத்தை எங்கும் பரவச் செய்தார். தமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கநாதப் பெருமான்மீது சொக்கநாத வெண்பா பாடித்துதித்தார். சிவபோகசாரம், முத்திநிச்சயம், சொக்கநாதக் கலித்துறை, ஞானப்பிரகாசமாலை, சோடசகலாப் பிராசாத சட்கம், திரிபதார்த்த ரூபாதிதசகாரிய அகவல், நவரத்தின மாலை ஆகிய நூல்களையும் அருளிச்செய்தார்.

இவ்வாறு பல்லாண்டுகாலம் ஞான அரசாட்சி புரிந்து சிவலிங்கத் திருவுருவின்கீழ் ஜீவசமாதி கூடினார் ஸ்ரீ குருஞான சம்பந்தர். இவர்கள் ஜீவசமாதிகூடிய குருமூர்த்தமே தற்பொழுது ஸ்ரீ ஞானம்பிகை உடனுகிய ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலாக விளங்கி வருகிறது. கி. பி. 16 ஆம் நூற்றாண்டில் ஸ்ரீ குருஞான சம்பந்தரால் தோற்றுவிக்கப்பெற்ற இத்தருமையாதீனம் மொழித் தொண்டும், சமயத்தொண்டும், சமூகத்தொண்டும் ஒல்லும் வகையெல்லாம் ஆற்றி வருகிறது. ஸ்ரீ குருஞான சம்பந்தரது பரம்பரையில் தற்பொழுது இருபத்தாறுவது குருமகா சன்னிதானமாக எழுந்தருளியிருப்பவர்கள் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஆவார்கள்.

சிவமயம்

# திருவடுகூர்த் தலச் சிறப்புக்கள்

தமிழ் நாட்டின் பகுதிகளுள் ஒன்று நடுநாடு. இந்நடு நாட்டில் உள்ள முக்கியத் தலங்கள் இருபத்திரண்டு. இந்த இருபத்திரண்டு தலங்களுள் பதினாறுவது தலமாக எண்ணப்படும் தலம் இத்திருவடு கூர்த் தலமாகும். இத்திருத்தலம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் புலிக்கொடி யுயர்த்திப் புவியினை ஆண்ட சோழ ஆட்சியில் சீரோடும் சிறப்போடும் விளங்கிய ஊர்களுள் ஒன்றாகிய திரிபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலம் என்னும் பெயரொடு விளங்கும் பேரூரின் எல்லைக்கு உட்பட்டிருந்த ஒரு மூதூராகும்.சோலைகளும்,பசுமைநிறை வயல்களும், தண்மைநிறை வாவிகளும் அழகுடன் அமையப்பெற்ற இவ்வூருக்கு இன்றைய பெயர் திரு ஆண்டார் கோயில் என்பதாகும். இப்பெயர் அக்காலத்தில் இருந்திருக்கவில்லை. இவ்வூரின் பெயர் களையும் அப்பெயர்கள் வந்த காரணங்களையும் பற்றிப் பலர் பல விதமாகக் கூறக்கேட்கலாம். இவற்றை ஆராயப் புராணக் கூற்றுக் களையும்,தேவாரத் திருப்பதிகங்களையும்,கல்வெட்டுச் சான்றுகளையும் நோக்கவேண்டியது அவசியமாகும்.

இத்திரு ஆண்டார் கோயில் புதுச்சேரி மாநிலத்தின் ஒரு கொம்யூனாகிய மண்ணாடிப்பட்டு கொம்யூனின் தலைமை அலுவலகம் உள்ள திருபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலம் என்று அழைக்கப் பட்ட பேரூரின் எல்லையில் புதுச்சேரி விழுப்புரம் பேருந்து சாலையின் வடபால் அமைந்துள்ளது. பேருந்துகளில் வரும் அன்பர்கள் கோயிலுக்கு அருகிலேயே இறங்கலாம். புகைவண்டியில் வரும் அன்பர்கள் விழுப்புரம் புதுச்சேரி புகைவண்டி சாலையில் உள்ள சின்னபாபு சமுத்திரம் என்ற புகைவண்டி நிலையத்தில் இறங்கிப் பேருந்தின் மூலமாக இவ்வூர் வந்து சேரலாம்.

இவ்வூருக்கு வடுகூர் என்ற ஒரு பெயர் இருந்ததாகச் சிலர் கூறுகின்றனர்.இப்பெயர் அமைந்தமைக்குக் கூறப்படும் காரணங்கள் பலவாகும். அவற்றைக் காண்போம்.

(1) வடுகு என்ற சொல் இந்தள ராகத்தைக் குறிக்கும் என்றும் இவ்வூரைச் சேர்ந்த சோலைகளில் தாதுண்டு திரியும் வண்டுகள் இசைக்கின்ற பண் இந்தளமாக இருத்தல் பற்றி வடுகூர் என்ற பெயர் இவ்வூருக்கு வந்ததென்று நிகண்டை ஆதாரங்காட்டிக் கூறுவர். "வடுகே இந்தளராகம் பேர் மருதயாழ்த் திறனுமாமே" எனக் கூறுகிறது நிகண்டு,

(2) பிரம்மனுக்கு வடுகன் என்ற ஒரு பெயரும் உண்டு. ஒரு சமயம் ஐந்து தலைகள் பெற்றிருந்த பிரம்மன் தானும் சிவனைப்போல் ஐந்து தலைகள் பெற்றிருக்கிறேனென்று தருக்கித் திரிந்தான். இப்பிரம்மனின் செருக்கை அடக்க விரும்பிய சிவன் பிரம்மனின் ஒரு தலையைக் கிள்ளிவிட்டான். இதனால் பெருந்துயருக்குள்ளாகிய பிரம்மன் குற்றத்தை மன்னித்தருளும்படி சிவனை வேண்ட, அப்பெருமான் தம்மை இத்தலத்திறைவனை வழிபட்டால் துன்பம் தொலையுமென்று பணித்தான். அதன்படி பிரம்மனாகிய வடுகன் இங்கு வந்து வழிபட்டதால் திருவடுகூர் என்று இத்தலத்திற்குப் பெயர் வந்ததென்று புராண அடிப்படையில் கூறுவர்.

(3) வடுகன் என்ற வைரவர் இத்தலத்து இறைவனை வழி பட்டுப் பேறு பெற்றமையால் இப்பெயர் வந்தது என்று தருமபுர ஆதீனத் தேவாரப் பதிப்பு பகர்கிறது.

(4) ஒரு காலத்தில் தெலுங்கு நாட்டவர் தமிழ்நாட்டின் பல பகுதிகளில் வந்து குடியேறினர் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். தெலுங்கரை வடுகர் என்றும் தெலுங்கு மொழியை வடுகு என்றும் குறிப்பிடுவதுண்டு.

''மழலைத்திரு மொழியிற்சில வடுகுஞ்சில தமிழும்
குழறித்தரு கருநாடிகர் குறுகிக் கடைதிறமின்''

— கலிங்கத்துப்பரணி

பெரும்பாலான தெலுங்கர்கள் கூடிவாழ்ந்த இப்பகுதி வடுகூர் என்றழைக்கப்பட்டிருத்தல் வேண்டும். இன்னும் இச்சிற்றூரில் தெலுங்கு மொழியைத் தாய் மொழியாகக் கொண்டோர் பலர் இருப்பது கண்கூடாகும். இக்காரணத்தினால்தான் இப்பகுதிக்கு வடுகூர் என்ற பெயர் வந்தது என்று எண்ணுவதிலும் தவறில்லை.

(5) கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த சைவசமயக் குரவரான திருஞானசம்பந்தர் திருப்பாதிரிப்புலியூரில் கோயில் கொண்டுள்ள இறைவனைப் பாடியபின் இப்பகுதிக்கு வந்து இவ்வூரில் கோயில் கொண்டுள்ள சிவபெருமானைப்போற்றிக் குறிஞ்சிப்பண்ணில் ஒரு பதிகம் அமைத்துள்ளார். அதன் முதல் திருப்பாடலில்,

"சுடுகூ ரெரிமாலை யணிவர் சுடர்வேலர்
கொடுகூர் மழுவாளொன் றுடையார் விடையூர்வர்
கடுகூர் பசிகாமங் கவலை பிணியில்லார்
வடுகூர் புனல்சூழ்ந்த வடுகூ ரடிகளே"

என்று பாடியுள்ளார். காழிப் பெருமான் கூறியதற்கு ஏற்ப இத்தலத்திலுள்ள சிவலிங்கமூர்த்தியின் திருமேனி முழுவதிலும் வடுக்கள் அதாவது தழும்புகள் காணக்கிடக்கின்றன. மேலும் சம்பந்தப் பெருமான் "வரிவண்டு பாடும் வடுகூர்" "வண்டாங் கறையும் வடுகூர்" என்றவாறெல்லாம் சிறப்பித்தமையின் வண்டு-ஆர்·கோயில் வண்டுகள் ஆர்ப்பரிக்கின்ற கோயில் என்னும் பொருளில் வண்டார் கோயில் என வழங்கிப் பின்னர் திரு என்ற அடைமொழி சேர்த்துத் திருவண்டார்கோயில் என்ருகிக் காலப்போக்கில் திருவாண்டார் கோயில் என மருவிற்று எனினும் பொருந்தும்.

ஆய்வாளர்கள் கல்வெட்டுகளின் சான்றுகளைக்கொண்டுநெல்லிக்குப்பத்தை அடுத்துள்ள திருக்கண்டீச்சுரம் என்னும் தலமே வடுகூர் எனக் கூறுவர். ஆனல் இத்தலத் தேவாரத் தொடர்களைக் காணும் போது பதினெரு திருப்பாடல்களுள் முதலும் இறுதியும் நீங்கலாக உள்ள ஏனைய ஒன்பது பாடல்களின் ஈற்றடியில் "வடுகூரில் ஆடும அடிகளே" என்ற தொடர் காணப்படுவதால் இப்பகுதியில் கூத்தப் பெருமானின் திருவுருவம் இருந்திருக்க வேண்டும் என்பது ஒருதலை.

(6) கல்வெட்டுச் சான்றுகளை நோக்குமிடத்து அந்தக் காலத்தில் திரிபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலத்தின் பேரெல்லைக்குள் திருவறை நக்கன் கோயில், திருநாகேசுவர முடையார் கோயில், அருளாகர ஈசுவர உடையார் கோயில் என்னும் மூன்று சிவன் கோயில்கள் இருந்தனவாகக் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. இவற்றுள் ஒன்ருன திருவறை நக்கன் கோயில் என்பதே இன்றுள்ள திருவாண்டார் கோயிலின் சிவாலயம் என்பதாகக் கல்வெட்டாராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.

பஞ்சநதீஸ்வரர் கோயில் என்று இக்காலத்தார் வழங்கும் திருவாண்டார் கோயிலில் 19 கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. அவை கி பி. 10ஆம் நூற்ருண்டின் முற்பகுதியிலிருந்து கி. பி. 16ஆம் நூற்ருண்டின் முற்பகுதிவரை ஆண்ட பல்வேறு மன்னர்களின் ஆணைப்படி வரையப்பெற்றனவாகும். முதலாம் பராந்தகச்சோழன். முதலாம இராசஇராசசோழன், முதலாம் இராஜேந்திரசோழன், முதலாம் குலோத்துங்கசோழன், விஜய நகர வேந்தரான விருப்பன்ன உடையார் வீரபுக்கர், கிருஷ்ணதேவ மகாராயர், சாளுவநரசிங்க மகாராசா ஆகியோர் காலத்தில்தான் மேற்குறித்த கல்வெட்டுகள் தோன்றின. இவற்றில் எந்தக் கல்வெட்டிலும் திருவாண்டார் கோயிலின் பெயர் காணப்படவில்லை. இன்றுள்ள கோயிலில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியுள்ள இறைவனைத்

"திருவறை நக்கன் கோயில் பரமஸ்வாமி", "திருவறையுடைய மகாதேவர்" என்று சோழர்கால" சாசனங்கள் குறிடபிடுகின்றன. கி. பி. 16ஆம் நூற்றுண்டில் ஆட்சிசெய்த சாளுவ நரசிங்க மகாராசன் என்ற மன்னரால் வரையப்பட்ட தெலுங்குக் கல்வெட்டு ஒன்றில் "திருவாண்டார்" என்னும் பெயர் காணப்படுகிறது. சோழர் கால்லத்தில் வழக்கிலிருந்த திருவறை ஆண்டார் எனும் பெயரே காலப்போக்கில் திருவாண்டார் என்று மருவி இருக்க வேண்டும் என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். திருவாண்டார் கோயில் என்ற கோயிலின் பெயரே பிற்காலத்தில் அதைச் சார்ந்த ஊருக்கும் பெயராயிற்று என்று கூறுதல் பொருந்தும். ஏனெனில் முதலாம் இராஜேந்திர சோழனின் 27 ஆம் ஆண்டில் (கி. பி. 1039 வடக்கு, மேற்குச் சுவர்களில் வரையப்பட்ட கல்வெட்டு ஒன்று இவ்வூர்க் கோயிலைக் குறிப்பிடுமிடத்து "ஜெயங்கொண்டசோழ மண்டலத்து பிரம்மதேயமான திரிபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலத்து திருவறையுடைய பரமஸ்வாமி" என்று குறிக்கப் பட்டுள்ளது. இதனல் இக்காலத்தில் தனிச் சிற்றூராகக் காட்சி யளிக்கும் திருவாண்டார் கோயில் ஒருகாலத்தில் திரிபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலம் என்றழைக்கப்பட்ட திரிபுவனையின் ஒரு பகுதியாக இருந்திருக்க வேண்டும் என்பது புலனுகிறது.

பஞ்சநாதர் அல்லது சந்திரசேகரர் என்று திருப்பெயர் சூடியுள்ள திருவாண்டார் கோயில் ஈசனுக்கு வடுகநாதர் என்று மற்றொரு பெயரும் உண்டு. இப்பெயர் வந்ததற்கான காரணம் முற்பகுதியில் கூறப்பட்டுள்ளது. இறைவியின் பெயர் திரிபுரசுந்தரி அல்லது வடுவகிர்க்கண்ணி அம்மை என்பதாகும். இறைவியின் திருக்கோயில் திருச்சுற்றுக்கு வெளியே தெற்குநோக்கி அமைக்கப் பட்டிருந்ததாகத் தெரிகிறது. இன்று அக்கோயில் இடம் பெற்றிருந்த சுவடுகளை மட்டுமே காண முடிகிறது. சில அரிய சிற்பங்கள் ஆங்காங்குச் சிதறிக் கிடக்கின்றன. இக்கோயிலின் தலவிருட்சம் வன்னிமரமாகும். இக்கோயிலுக்குத் தீர்த்தம் பெண்ணெய்நதி என்று தருமபுர ஆதீன தேவாரப்பதிப்பில் காணப்படுகிறது. இக்காலத்தில்( கோயிலின் வடமேற்கிலுள்ள ஏரியைக் கோயிலின் தீர்த்தமாகக் கொண்டு அதனை "வாமதேவ தீர்த்தம்" என்று குறிப்பிடுகின்றனர்.

## தலச் சிறப்பு

அஷ்ட பைரவர்களில் வடுகபைரவர் வழிபட்ட தலம் இத்தல மாகும். சிவபிரானையன்றி ஏனையோர் பிறரைக் கொல்ல நேரின் கொலைப்பழி அவர்களைப் பற்றுமாதலின் முண்டகாசுரனைக் கொன்ற கொலைப்பழிதீர வயிரவர் இத்தலத்து இறைவரை வழிபட்டுக் கொலைப் பாவம் தீரப்பெற்றார். திருஞானசம்பந்

மூர்த்தி சுவாமிகள் இத்தலத்திற்கு எழுந்தருளி ஓதிய திருப்பதிகம் ஒன்றில் ஞானசம்பந்தர் இறைவர் திருநடமபுரிதலை விதந்து கூறுகிறார். யானை உரித்தது; முப்புரம் எரித்தது; எமனை உதைத்தது; திருமால், பிரமன் அடிமுடி தேடியது முதலிய புராண வரலாறுகள் குறிப்பிடப்பட்டுள்ளன. இத்தலத்து இறைவனை வழிபடுவார் அடிசேர் ஞானம் பெற்றுச் சிவசாயுச்சியம் பெறுவர் எனப் பதிகப்பயன் கூறப்பட்டுள்ளது. இத்தலத்து ஆறுமுகக் கடவுள்மீது அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ் ஒன்றும் உள்ளது.

## கோயிலமைப்பு

இத்திருக்கோயில் தொல்பொருள் ஆய்வுத் துறையினரால் பாதுகாக்கப்பெறுகிறது. கிழக்கு நோக்கி அமைந்த இத்திருக் கோயிலின் வெளிப்புறச் சுவர் சிதைந்த நிலையில் காணப்படுகிறது. இரண்டு பிரகாரங்களை உடையதாய் இத்திருக்கோயில் இருந்த தாகத் தெரிகிறது. ஏறக்குறைய மூன்றடி அகலமுள்ள செங்கல் சுவர் சிதைந்த நிலையில் காட்சிதருவதைக் கொண்டு இச்சுவர் சோழர் காலத்தில் கட்டப்பட்டிருக்க வேண்டுமென்று கூறப் படுகிறது. அதற்குமேல் எழுப்பப் பெற்றிருந்த கருங்கற் சுவர் பல்லவர் காலத் திருப்பணியாகும் எனக் கூறலாம். இப்போதுள்ள நுழைவாயிலுக்கு வெளியில் கருங்கல்லாலான நந்தி ஒன்று காணப் படுகின்றது. இராஜகோபுரம் இல்லாத கட்டைக் கோபுர நுழைவாயிலைக் கடந்து சென்றால் கொடிமரமேடை, நந்தி பலி பீடங்கள் ஆகியவற்றுடன் பதினெட்டுக்கால் பண்டபம் ஒன்றைக் காணலாம். இதில்தான் தெற்கு நோக்கிய வண்ணம் தேவி திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கிறாள். இந்த மண்டபத் தைக் கடந்து சென்றால் முழுத்தூண்களும் அரைத்தூண்களுமாக எட்டுத் தூண்களைக் கொண்ட அர்த்த மண்டபம் உள்ளது. அர்த்த மண்டபத்து வாயிலில் வேலைப்பாடமைந்த இரண்டு துவார பாலகர்கள் சிலைகள் உள்ளன. ஒரே உயரமுள்ள இச்சிலைகள் வெவ்வேறான அமைப்பும் கலைத்திறனும் கொண்டவை. வடக்குத் திசையில் இருப்பது பல்லவர் காலத்தது என்றும் தெற்குத் திசையில் இருப்பது சோழர் காலத்தது என்றும் கூறப்படுகிறது. இவற்றை அடுத்துள்ள கருவறை சதுரவடிவில் ஆகம விதிப்படி அமைக்கப்பட்டிருக்கிறது. மூலத்தானத்தில் சந்திரசேகரர், திரிபுர சுந்தரி, கணபதி, திருநாவுக்கரசர் ஆகியோரின் உற்சவ மூர்த்திகள் காணப்படுகின்றன. பிரகாரத்தினை வலம் வரும்போது தெற்குப் பிரகாரத்தில் நால்வர் திருக்கோயில் திருப்பணி செய்யப்பட்டுத் திருவுருவங்கள் பிரதிஷ்டை செய்யாமல் உள்ளதைக் காணலாம்.

கன்னிமூலையில் தனிக்கோயிலில் வலம்புரி விநாயகர் விளங்கு கிறார். நிருதி மூலையில் ஆறுமுகக் கடவுள் வள்ளி தெய்வானை யுடன் காட்சி தருகிறார். இருபதுகால் மண்டபத்தையும் அர்த்த மண்டபத்தையும் கருவறையையும் உள்ளடக்கிய சுவர்களின் வெளிப்பிரகாரத்தில் தமிழ், தெலுங்கு சாசனங்கள் இடம் பெற்றுள் ளன. இவற்றிற்கு மேல் அமைத்துள்ள மாடங்களில் தெய்வத் திருமேனிகள் வைக்கப்பட்டுள்ளன. தெற்கு நோக்கிய மாடங்களில் பிக்ஷாடனர், பிள்ளையார், தக்ஷிணாமூர்த்தி ஆகியோரையும்; மேற்கு நோக்கிய மாடத்தில் லிங்கோத்பவரையும்; வடக்குநோக்கிய மாடங் களில் பிரம்மா, எட்டுக் கரங்களோடு கோரப்பல் இல்லாத நிலையில் சாந்தமூர்த்தியாக விளங்கும் துர்க்கை, அர்த்த நாரிசுவரர், இடபாருடர் ஆகியோரையும் கண்டு தரிசிக்கலாம். வடக்குப் பிரகாரத்தில் சண்டேசர் கோயில் ஒன்று உள்ளது. வடகிழக்கே பைரவர் மண்டபமும், கிழக்கே சூரியன் மண்டபமும் திருப்பணிகள் செய்யப்பட்டுள்ளன. இக்கோயிலின் அமைப்பையும் சிற்பங்களை யும் ஆராய்ந்த ஆய்வாளர்கள் இதனை முதலாம் பராந்தகச் சோழன் காலத்துத் திருப்பணி என்று கூறியுள்ளனர். கருவறையும் அர்த்த மண்டபமும் மூலக் கோயிலாக விளங்கியிருக்க வேண்டும், நேர்முக வாயிலேயன்றி வலப்புற மண்டபத்தையும் வழியையும் கொண்டுள்ளது. கர்ப்பக் கிரகம், அர்த்த மண்டபம், மகாமண்டபங், களோடு சுவாமிகோயில் விளங்குகிறது. அர்த்த மண்டபம் சோழர் காலத்துப் பொதிகைத் தூண்களுடன் உள்ளது கர்ப்பக் கிரகவிமானம் தஞ்சைப் பெரிய கோயிலமைப்பில் உள்ளது. சுவாமி அருள்மிகு வடுகநாதர் சுயம்பு மூர்த்தி, நம் உள்ளம் கவரும் தெய்வீகக் கலையுடன் காட்சிதருகிறார். பஞ்சமூர்த்திகள் நடராஜர், சிவகாமி, சுப்பிரமணியர் திருவுருவங்கள் காணப்பட வில்லை, விநாயகர், சந்திரசேகரர், அம்பாள் மட்டுமே உள்ளனர்.

அம்பாள் திருப்பெயர் அருள்மிகு வடுவகிரிக் கண்ணம்மை ஆகும். மாவடுவைப் பிளந்தாலொத்த கண்களையுடையவள் என்னும் பொருளில் இத்திருப்பெயர் வழங்கப்படுகிறது. இவ்வம்மை க்கு நான்கு திருக்கரங்கள் உள்ளன. மேலிரண்டு திருக்கரங்களில் தாமரை மலர்களை ஏந்தியுள்ளாள். அபய ஊர்த்துவத் திருக்கரங் களுடன் விளங்குகிறார். அம்பிகை அருள் நலம் கனிந்த திருமுகத் துடன் காட்சி தருவது நம் உள்ளத்திற்கு இதமளிப்பதாக இருப்பதை இச்சந்நிதியில் நாம் உணரலாம்.

இத்தலத்தில்விளங்கும் ஆறுமுகக் கடவுள் திருவுருவம் பேரழகு டையதாகும். ஆறுமுகக் கடவுள் தனது ஊர்தியாகிய மயிலின்மீது அமர்ந்த நிலையில் காணப்படுகிறார்.

## வடுக மூர்த்தி

சிவபெருமான் கொண்டருளிய கோலங்களில் வடுகமூர்த்தியும் ஒன்றாகும். சிவமூர்த்தங்கள் அறுபத்து நான்கனுள் இது நாற்பதாவது மூர்த்தமாக எண்ணப்பெறும்.

சிவார்ச்சனைப் பயனால் பெருவலி பெற்ற துந்துபி என்போன் மைந்தனாகிய முண்டாசுரன் இளமைப்பருவத்திலேயே சிவபெருமானை நோக்கிக் கடுந்தவம் புரிந்து வந்தான். இவன் மழை பனி, வெயில் ஆகியவற்றில் நின்று மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய ஐம்புலன்களையும் ஒடுக்கிப் பசி, தாகம், நித்திரை ஆகியவை தவிர்த்துப் பலகாலம் கடுந்தவம் செய்ததால் சிவபிரான் முண்டாசுரனுக்கு அருள்புரியத் திருவுளம் கொண்டார். எனவே திருமால், பிரமன் ஆகியோருடன் உமையொருபாகராய் விடைமீது காட்சியளித்தார். அக்காட்சியைக் கண்ட மூண்டன் அளவிலா மகிழ்வு கொண்டு ஆனந்தக் கூத்தாடியும், பாடியும் பெருமானை நிலமிசை வீழ்ந்து பணிந்து துதித்தான்.

அன்பர் துதிக்கு அகமகிழும் ஐயனாகிய சிவபிரான் ''வேண்டிய வரம் யாது?'' என முண்டாசுரனை வினவினார். முண்டாசுரன் "பெருமானே தேவாசுரர்களில் ஒருவரானும் தோல்வியடையாமலும் தேவரீராலன்றிப் பிறரால் கொல்லப்படாமலும் அரசுபுரியும் பெருவலிமையை அடியேனுக்கு அளிக்கவேண்டு' மென்று வேண்டினான்.

சிவபெருமான் முன்டாசுரன் வேண்டியவாறே வரமளித்து மறைந்தருளினார். முண்டாசுரன் இறைவனது வரத்தினால் பெருவலி பெற்றான். அசுரர்களைவென்று அவர்களைத் தன் சேனைகளாகக் கொண்டான். தேவருலகம் சென்று இந்திரன் முதலானோரை வென்று இந்திராணியைச் சிறைப்படுத்த முயன்றான்.

ஆகாண்டலன் என்பவன் இச்செய்தியை அறிந்து முண்டா சுரனிடமிருந்து தப்பித்து, சத்திய உலகம் சென்று நான்முகனைச் சரணடைந்து நடந்த நிகழ்ச்சிகளைக் கூறிநின்றான். இதனை அறிந்த முன்டாகரன் நானமுகனை வெல்லுவற்குக் கருதினான். சத்திய உலகை அடைந்து பிரமனைப் போருக்கு அழைத்தான். பிரமனும் அன்ன வாகனத்தில் ஏறிநின்று முண்டாசுரனோடு போரிட்டான். முண்டாசுரனைப் போரில் வெற்றி கொள்ள முடியாததை அறிந்த பிரமன் சிவபெருமானை நோக்கி ஓலமிட்டான்

அமரர் புடைசூழக் கயிலை மலையில் திருவோலக் கத்திலிருந்த சிவபெருமான் திருச்செவிகளில் பிரமனது அபயக்குரல் கேட்டது. பெருமான் பிரமன்மேல் கருணைகூர்ந்து முண்டாசுரனை அழித்து வருமாறு வடுகபைரவருக்குக் கட்டளையிட்டருளினார் வடுகபைரவர் பெருமானின் கட்டளையை ஏற்று முண்டாசுரனை அடைந்து அவனது படைகளை முதலில் அழித்தார். முண்டாசுரன் தனித்து நின்று வடுகபைரவரோடு போரிட்டான். வடுகபைரவர் மிக்க சினம் கொண்டு முண்டாசுரனைக் கொன்று அவனுயிரைப் போக்கினார். பிரமன், இந்திரன் முதலாயினோர் தத்தம் உலகங்களுக்குச் சென்று வாழ அருள்புரிந்தார். மீண்டும், கயிலாயம் சென்று சிவபிரானிடம் நிகழ்ந்ததைக் கூறினார்.

பிரமனது வேண்டுகோளுக்கு இரங்கிச் சிவபிரான் முண்டா சுரனை அழிக்குமாறு விடுத்த மூர்த்தியே வடுகபைரவராவர். வடுகபைரவர் வழிபட்ட திருக்கோயில் வடுகூர் என அழைக்கப் படுகிறது.



சிவமயம்

## திருவடுகூர்த் திருப்பதிகம்

### திருஞான சம்பந்த சுவாமிகள் அருளியது

# திருப்பதிக வரலாறு

சண்பை வேந்தர் திருப்பாதிரிப் புலியூரை வணங்கிப் பதிகம் பாடித் திருவடுகூரை அடைந்தார். இறைவனை வணங்கி, ''சுடுகூர் எரிமாலை'' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்.

பண் — குறிஞ்சி

**திருச்சிற்றம்பலம்**

சுடுகூ ரெரிமாலை யணிவர் சுடர்வேலர்
கொடுகூர் மழுவாளொன் றுடையார் விடையூர்வர்
கடுகூர் பசிகாமங் கவலை பிணியில்லார்
வடுகூர் புனல்சூழ்ந்த வடுகூ ரடிகளே. 1

1. வண்டுகள் சூழ்ந்து மிகுந்துள்ள நீர்நிலைகளால் சூழப்பட்ட வடுகூர் அடிகள் கடுமை மிக்க தீவரிசையை அணிவர். ஒளிமிக்க வேலையுடையவர். கொடிய மழு ஆயுதத்தை ஏந்தியவர், விடைமீது ஊர்ந்து வருபவர். கொடிய பசி, காமம், கவலை,பிணி இல்லாதவர்.

பாலுந் நறுநெய்யுந் தயிரும் பயின்றாடி
ஏலுஞ் சுடுநீறு மென்பு மொளிமல்கக்
கோலம் பொழிற்சோலைக் கூடி மடவன்னம்
ஆலும் வடுகூரி லாடும் அடிகளே.

2. அழகிய பொழில்களில் அன்னங்கள் ஒலிக்கும் வடுகூரில் நடஞ்செய்யும் அடிகள் பால், நெய், தயிர் இவற்றை ஆடி நீறு என்பு ஆகியவற்றை ஒளிமல்கச் சூடியவர்.

சூடு மிளந்திங்கட் சுடர்பொற் சடைதன்மேல்
ஓடுங் களியானை யுரிபோர்த் துமையஞ்ச
ஏடு மலர்மோந்தங் கெழிலார் வரிவண்டு
பாடும் வடுகூரி லாடும் அடிகளே. 3

3. அழகிய வரிவண்டுகள் மலர் இதழ்களை முகர்ந்து பாடும் வடுகூர் அடிகள், ஒளிபொருந்திய சடைமுடி மீது இளந்திங்கள் சூடுவர். உமையம்மை அஞ்ச மதயானையை உரித்து அதன் தோலைப் போர்த்து ஆடுவர்.

துவரும் புரிசையுந் துதைந்த மணிமாடம்
கவர வெரியோட்டிக் கடிய மதிலெய்தார்
கவரு மணிகொல்லைக் கடிய முலைநல்லார்
பவரும் வடுகூரி லாடும் அடிகளே. 4

4. கண்டாரைக் கவரும் மணிகள் நிறைந்த முல்லை நிலத்தில் வாழும் மகளிர்களாகிய கொடிகள் நிறைந்த வடுகூரில் நடம்புரியும் அடிகள் துவர் நிறமுடையதாய் விளங்கும் மதில்கள் சூழ்ந்த மாடங்களில் தீ எழச்செய்து முப்புரங்களை எய்தழித்தவர்.

துணியா ருடையாடை துன்னி யரைதன்மேல்
தணியா வழலுநாகந் தரியா வகைவைத்தார்
பணியா ரடியார்கள் பலரும் பயின்றேத்த
அணியார் வடுகூரி லாடும் அடிகளே. 5

5. மணியையே அணியாகக் கொண்ட அடியவர்கள் பலரும் பயின்றேத்த அழகிய வடுகூரில் நடம்புரியும் அடிகள் கோவணம் உடுத்தி அரைமீது நாகை அரவைத் தரித்தவர் ஆவார்.

தளருங் கொடியன்னாள் தன்னோ டுடனாகிக்
கிளரு மரவார்த்துக் கிளரு முடிமேலோர்
வளரும் பிறைசூடி வரிவண் டிசைபாட
ஒளிரும் வடுகூரி லாடும் அடிகளே. 6

6. வரிவண்டு இசைபாட அழகிய வடுகூரில் ஆடும் அடிகள், கொடிபோன்ற உமையம்மையோடு உடனாகி அரவு, பிறை இவற்றை அணிந்து விளங்குபவர்.

நெடியர் சிறிதாய நிரம்பா மதிசூடும்
முடியார் விடையூர்வர் கொடியர் மொழிகொள்ளார்
கடிய தொழிற்காலன் மடிய உதைகொண்ட
அடியர் வடுகூரி லாடும் அடிகளே 7

7. வடுகூரில் நடம்புரியும் அடிகள் பேருருவினர். சிறிய பிறை மதியைச் சூடும் முடியர். விடையூர்தியர். சொடியர் மொழி கொள்ளாதவர். காலனை உதைத்த திருவடியை உடையவர்.

பிறையும் நெடுநீரும் பிரியா முடியினர்
மறையும் பலபாடி மயானத் துறைவாரும்
பறையு மதிர்குழலும் போலப் பலவண்டாங்
கறையும் வடுகூரி லாடும் அடிகளே. 8

8. பறையும்குழலும் போலப்பலவண்டுகள் ஒலிக்கும் வடுகூரில் நடம்புரியும் அடிகள், பிறையும் கங்கையும் பிரியா முடியினர். வேதங்களைப் பாடிக்கொண்டு மயானத்தில் உறைபவர்.

சந்தம் மலர்வேய்ந்த சடையின் னிடைவிம்மு
கந்தம் மிகுதிங்கட் சிந்து கதிர்மாலை
வந்து நயந்தெம்மை நன்று மருள்செய்வார்
அந்தண் வடுகூரி லாடும் அடிகளே. 9

9. அழகிய தண்மையான வடுகூரில் நடம்புரியும் அடிகள், மலர்புனைந்த சடைக்காட்டில் விளங்குவதால் மணம் மிக்க பிறை மதிதரும் கதிர்களோடு வந்து நயந்து நன்மையை அருளுவார்.

திருமா லடிவீழத் திசைநான் முகனுய
பெருமா னுணர்கில்லாப் பெருமா னெடுமுடிசேர்
செருமால் விடையூருஞ் செம்மான் றிசைவில்லா
அருமா வடுகூரி லாடும் அடிகளே. 10

10. திசைகளிலெல்லாம் புகழொளியைச் செய்கின்ற அரிய பெரிய பதியாகிய வடுகூரில் நடம்புரியும் அடிகள், திருமால் பிரமன் ஆகியோரால் உணரமுடியாத அடிமுடி உடையவர். மாலாகிய இடபத்தை ஊர்பவர்.

படிநோன் பகையாவர் பழியில் புகழானை
கடிநா ணிகழ்சோலை கமழும் வடுகூரைப்
படியா னசிந்தை மொழியார் சம்பந்தன்
அடிஞா னம்வல்லா ரடிசேர் வார்களே. 11

11. இவ்வுலகத்துள்ள நோன்புகள் அனைத்தும் ஆய இறைவன் எழுந்தருளியிருப்பதும், ஒப்பற்ற புகழோடு சோலைகள் மணம் கமழ்ந்து விளங்குவதுமாய வடுகூரைத் திருஞானசம்பந்தர் திருவடி ஞானத்தால் பரவிப்பாடிய இத்திருப்பதிகத்தை ஓதி அடிசேர் ஞானம் பெறுபவர் சிவசாயுச்சியம் பெறுவர்.

## சிவலிங்கம்

சுயம்புலிங்கம், காணலிங்கம், தைவிகலிங்கம், ஆரிடலிங்கம், மானுடலிங்கம் எனச்சிவலிங்கம் ஐவகைப்படும். இவ்வைவகைப்பட்ட சிவலிங்கங்களுள்ளே சுயம்பு லிங்கமானது தானேதோன்றியதாகும். காணலிங்கமானது விநாயகர், சுப்பிரமணியர் முதலிய கணர்களாலே தோற்றுவிக்கப்பட்டது. தைவிகலிங்கமானது விஷ்ணு முதலிய தேவர்களால் தோற்றுவிக்கப்பட்டது. ஆரிடலிங்கமானது இருடிகளால் தோற்றுவிக்கப்பட்டது. இதுவே அசுரர், இராக்கதர் முதலாயினரால் தோற்றுவிக்கப்பட்டதாகும். மானுடலிங்கமானது மனிதரால் தோற்றுவிக்கப்பட்டது

மானுடலிங்கத்தைவிட உயர்ந்தது ஆரிடலிங்கமாகும். ஆரிடலிங்கத்தைவிட உயர்ந்தது தைவிகலிங்கமாகும். இத்தைவிகலிங்கத்தைவிட உயர்ந்தது காணலிங்கமாகும் காணலிங்கத்தைவிட உயர்ந்தது சுயம்புலிங்கமாகும்.

## அஷ்டபைரவர் தியானம்

### 1. அசிதாங்க பைரவர்

பாணபத்ரம் சகட்கம்ச அக்ஷமாலாம் கமண்டலும்
திரிநேத்திரம் வரதம் சாந்தம் குமாரம் சதிகம்பரம்
பிரும்ஹாணி சக்தி சகிதம் ஹம்சாரூபம் சு பூஷணம்
ஸ்வேத வர்ணம் கிருபா மூர்த்திம் அசிதாங்கம் பஜாம்யகம்.

### 2. குரு பைரவர்

டங்கம் கிருஷ்ண மிருகம்சைவ கட்கம் பாத்ரம் ததைவச
திரிநேத்திரம் வரதம் சாந்தம் குமாரம் சதிகம்பரம்
மாகேச்வர்யாச சகிதம் விருஷாரூடம் ஸ்மிதானனம்
சுத்தஸ்படிகம் காசம் நமாமி குரு பைரவம்.

### 3. சண்ட பைரவர்

தனுர் பாணதரம் சைவ கட்க பாத்ரேண சம்யுதம்
திரிநேத்திரம் வரதம் சாங்கம் குமாரம் சதிகம்பரம்
கௌமாரீ சக்தி சகிதம் சிகிவாகன பூஷணம்
கௌரவர்ண தரம் தேவம் வந்தேகம் சண்டபைரவம்

### 4. குரோத பைரவர்

சங்க சக்ரதரம் தேவம் பாணபத்ர சகாதரம்
திரிநேத்திரம் வரதம் சாந்தம் குமாரம் சதிகம்பரம்
கௌமாரி சக்தி சகிதம் சிகிவாகன பூஷணம்
கௌரவர்ண தரம் தேவம் வந்தே ஸ்ரீ குரோத பைரவம்

### 5. உன்மத்த பைரவம்

கட்கம்ச முசலம் சைவ கேடகம் சகபாலம்
திரிநேத்திரம் வரதம் சாந்தம் குமாரம் சதிகம்பரம்
ஹேமவர்ண தரம் தேவம் அஸ்வ வாகன சம்யுதம்
வாராகி சக்தி சகிதம் வந்தே உத்மந்த பைரவம்.

### 6. கபாலி பைரவம்

பாசம் வச்ராயுதம் சைவ கட்கம்ச பாணபத்ரகம்
திரிநேத்திரம் வரதம் சாந்தம் குபிரமுந்து திகம்பரம்
இந்திராணி சக்தி சகிதம் கஜவாகன சம்யுதம்
பத்மராகப் ரபவம் தேவம் கபாலி பைரவம் பஜே.

### 7. பீஷண பைரவர்

சூலம் சமுத்கரம் சைவ கபாலெம் கட்க ஹஸ்தகம்
திரிநேத்திரம் வரதம் சாப்தம் குமாரஞ்ச திகம்பரம்
சாமுண்டா சக்தி சகிதம் சிம்மவாகன சம்யுதம்
ரக்த வர்ணதரம் தேவம் வகிதே பீஷ்ண பைரவம்

### 8. சம்ஹார பைரவர்

சூலம்ட மருகம் சைவ சங்கம் சக்ர சதாதரம்
கட்கம் பாத்ரஞ்ச கட்வாங்கம் பாசாங்குச தாம்ததா
தசகாகும் திரிநேத்ரஞ்ச சர்பராஜோப வீதினம்
திகம்பரம் குமாரஞ்ச ஸ்வான வாகன சம்யுதம்
தம்ஷ்ட்ரா கரான வதனம் அஷ்டைஸ்வர்ய பலப்பிரதம்
சண்டிகா சக்தி சகிதம் தியாயேத் சம்ஹாரபைரவம்.

## திருவாசகம்

### திருச்சிற்றம்பலம்

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்
கோனாகி யான்எனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே.

### திருவிசைப்பா

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணைமா கடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றஎம் சிவனைத்
திருவீழி மிழலைவீற் றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டுகண் டுள்ளம்
குளிரஎன் கண்குளிர்ந் தனவே.

### திருப்பல்லாண்டு

பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப்
பாற்கடல் ஈந்தபிரான்
மாலுக்குச் சக்கரம் அன்றருள் செய்தவன்
மன்னிய தில்லை தன்னுள்
ஆலிக்கும் அந்தணர் வாழ்கின்ற சிற்றம்
பலமே இடமாகப்
பாவித்து நட்டம் பயிலவல் லானுக்கே
பல்லாண்டு கூறுதுமே.

### பெரிய புராணம்

கன்னி மாவனம் காப்பென இருந்தவர்
கழலினை பணிந்தங்கு
முன்ன மாமுடக் கான்முயற் கருள்செய்த
வண்ணமும் மொழிந்தேத்தி

மன்னு வார்பொழில் திருவடு கூரினை
வந்தெய்தி வணங்கிப் போய்ப்
பின்னு வார்சடை யார்திரு வக்கரை
பிள்ளையூர் அணைவுற்றார்.

## பிரபுலிங்கலீலை

பூவாய் நெடுங்கோட் டுறுபசுந்தேன்
கைகால் முடங்கு பொறியிலிதன்
காவா யொழுகிற் றெனவுலகம்
அளந்த மாலும் நான்முகனுங்
காவா யெனநின் றேத்தெடுப்பத்
தானே யுவந்தெங் கரதலத்தில்
மேவா அமர்ந்த மாமணியைத்
தொழுது வினைக்கு விடைகொடுப்பாம்.

## திருவாசகம்

பால்நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே

## திருவெம்பாவை

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாட்டடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்தியவாழ்த் தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்(டு) இங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னே என்னே
ஈதே எந்தோழி பரிசேலோர் எம்பாவாய்

## திருப்புகழ்

அரியயன் அறியா தவரெரி புரமு
 னுதுபுக நகையே வியநாதர்
அவர்சடை மிசையோர் வனிதையர் பதிசீ
 றழலையு மழிநேர் பிடிநாதர்
வரைமகள் ஒருகூ றுடையவர் மதன
 கமும் விழ விழியே வியநாதர்
மனமகிழ் குமரா எனவுன திருதாள்
 மலரடி தொழுமா றருள்வாயே.
அருவரை இருகூ றிடவொரு மயில்மேல்
 அவனியை வலமாய் வருவோனே
அமரர்கள் இகல்தீ டசுரர்கள் சிரமேல்
 அயில்தனை விசையாய் விடுவோனே
வரிசையொ டொருமா தினைதரு வனமே
 மருவியொர் குறமா தணைவேடா
மலைகளில் மகிழ்வாய் மருவிநல் வடுகூர்
 வருதவ முனிவோர் பெருமாளே.

## பன்னிரு திருமுறை ஆசிரியர்கள்

திருஞான சம்பந்தர் வாகீசர் சுந்தரர்
 திருவாத வூரர் மற்றைத்
திருமாளிகைத் தேவர் சேந்தனார் கருவூர்த்
 தெள்ளு பூந்துருத்தி நம்பி
வருஞான கண்டரா தித்தர் வேணாட்டடிகள்
 வாய்ந்ததிரு வாலி யமுதர்
மருவு புருடோத்தமர் சேதிராயர் மூலர்
 மன்னு திருஆல வாயார்
ஒருகாரைக் காலம்மை ஐயடிகள் சேரமான்
 ஒளிர் கீரர் கல்லாடனார்
ஒண்கபிலர் பரணர் மெய்உண ரிளம்பெருமானோடு
 ஓங்கும் அதிரா வடிகளார்
திருமேவு பட்டினத் தடிக ளோடு
 நம்பியாண்டார் நம்பி சேக்கிழாரும்
சிவநெறித் திருமுறைகள் பன்னிரண் டருள்செய்த
 தெய்விகத் தன்மை யோரே.

## திருமுறை ஆசிரியர்களும் பன்னிரு திருமுறைகளும்

| அருளிச் செய்தவர் | திருமுறைப்பெயர் | திருமுறை வரிசை |
|---|---|---|
| 1. திருஞானசம்பந்தர் | தேவாரம் | 1 ஆம் திருமுறை<br>2 ஆம் திருமுறை<br>3 ஆம் திருமுறை |
| 2. திருநாவுக்கரசர் | தேவாரம் | 4 ஆம் திருமுறை<br>5 ஆம் திருமுறை<br>6 ஆம் திருமுறை |
| 3. சுந்தரர் | தேவாரம் | 7 ஆம் திருமுறை |
| 4. மாணிக்கவாசகர் | 1. திருவாசகம்<br>2. திருக்கோவையார் | 8 ஆம் திருமுறை |
| 5. திருமாளிகைத் தேவர்<br>6. சேந்தனார்<br>7. கருவூர்த்தேவர்<br>8. பூந்துருத்தி நம்பிகாட நம்பி<br>9. கண்டராதித்தர்<br>10. வேணாட்டடிகள்<br>11. திருவாலியமுதனார்<br>12. புருடோத்தம நம்பி<br>13. சேதிராயர் | திருவிசைப்பா | 9 ஆம் திருமுறை |
| சேந்தனார் | திருப்பல்லாண்டு | |
| 14. திருமூலர் | திருமந்திரம் | 10 ஆம் திருமுறை |

**11 ஆம் திருமுறை**

| | |
|---|---|
| 15. திருவாலவாயுடையார் | திருமுகப் பாசுரம் |
| 16. காரைக்காலம்மையார் | 1. திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் |
| | 2. மூத்த திருப்பதிகம் |
| | 3. திருவிரட்டை மணிமாலை |
| | 4. அற்புதத் திருவந்தாதி |
| 17. ஐயடிகள் காடவர்கோன் நாயனார் | க்ஷேத்திரத் திருவெண்பா |
| 18. சேரமான் பெருமாள் நாயனார் | 1. பொன் வண்ணத்தந்தாதி |
| | 2. திருவாரூர் மும்மணிக்கோவை |
| | 3. திருக்கைலாய ஞானஉலா |
| 19. நக்கீரதேவ நாயனார் | 1. கயிலைபாதிகாளத்திபாதி அந்தாதி |
| | 2. திருவீங்கோய்மலை எழுபது |
| | 3. திருவலஞ்சுழிமும்மணிக் கோவை |
| | 4. திருவெழு கூற்றிருக்கை |
| | 5. பெருந்தேவபாணி |
| | 6. கோபப்பிரசாதம் |
| | 7. கார் எட்டு |
| | 8. போற்றித்திருக் கலிவெண்பா |
| | 9. திருமுருகாற்றுப்படை |

11 ஆம் திருமுறை

| | |
|---|---|
| 20. கல்லாட தேவநாயனர் | திருக்கண்ணப்பதேவர் திருமந்திரம் |
| 21. கபிலதேவ நாயனர் | 1. மூத்த நாயனர் திருவிரட்டை மணிமாலை<br>2. சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை<br>3. சிவபெருமான் திருவந்தாதி |
| 22. பரணதேவ நாயனர் | சிவபெருமான் திருவந்தாதி |
| 23. இளம்பெருமான் அடிகள் | சிவபெருமான் திருமும்மணிக் கோவை |
| 24. அதிராவடிகள் | மூத்தபிள்ளையார் திருமும்மணிக் கோவை |
| 25. பட்டினத்துப் பிள்ளையார் | 1. கோயில் நான்மணிமாலை<br>2. திருக்கழுமல மும்மணிக் கோவை<br>3. திருவிடை மருதூர் மும்மணிக் கோவை<br>4. திருவேகம்பம் உடையார் திருவந்தாதி<br>5. திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது |

| | | |
|---|---|---|
| 26. நம்பியாண்டார் நம்பி | 1. திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலை<br>2. கோயில் திருப்பண்ணியர் வருத்தம்<br>3. திருத்தொண்டர் திருவந்தாதி<br>4. ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி<br>5. ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம்<br>6. ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக்கோவை<br>7. ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை<br>8. ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்<br>9. ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை<br>10. திருநாவுக்கரசு தேவர் திருவேகாதசமாலை | 11 ஆம் திருமுறை |
| 27. சேக்கிழார் | பெரிய புராணம் | 12 ஆம் திருமுறை |

இறைவனுக்கு அர்ப்பணம் செய்யும் பொருள்களினால் ஏற்படும் நன்மைகள்

| பொருள்கள் | நன்மைகள் |
|---|---|
| 1. பழவகைகள் | ஜனவசீகரம் |
| 2. பஞ்சாமிர்தம் | தீர்க்காயுள் |
| 3. பால் | சாந்தகுணம் |
| 4. தயிர் | திடகாத்திரம் |
| 5. தேன் | சங்கீதவன்னம் |
| 6. நெய் | சுகவாழ்வு |
| 7. கரும்பு சர்க்கரை | சாஸ்திரதேர்ச்சி |
| 8. இளநீர் | நன்மக்கட்பேறு |
| 9. விபூதி | ஞானம் |
| 10. சந்தனம் | சுவர்க்கபோகம் |
| 11. பன்னீர் | புகழ் |
| 12. வஸ்திரம் | சம்பாவனை |
| 13. புஷ்பம் | சந்தோஷம் |
| 14. கற்பூரம் | அத்வைத முத்தி |
| 15. குங்குமம் | மங்கலம் |

குறிப்பு:- செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் அபிஷேகம் செய்வது சிறந்தது.

## கடவுள் வழிபாடு

கருணாநிதியாகிய கடவுள், புறத்திலே திருக்கோயிலுள்ளிருக்கும் இலிங்கம் முதலிய திருமேனியும், தமது மெய்யடியாருடைய திருவேடமும் ஆதாரமாகக் கொண்டு நின்றும், அகத்திலே உயிர் இடமாகக் கொண்டு நின்றும் இங்குள்ளவர் செய்யும் வழிபாட்டைக் கொண்டருளுவர். ஆதலால் அவரை வழிபடும் இடங்கள் இவைகளேயாகும்.

கடவுள் அங்கிங்கெனாதபடி எங்கும் வியாபகமாய் நிற்பினும் இவ்விடங்களில் மாத்திரம் தயிரில் நெய்போல விளங்கி நிற்பர் மற்றையிடங்களிலெல்லாம் பாலில் நெய்போல விளங்காது நிற்பர்.

கடவுளுக்குச் செய்யும் வழிபாடுகளாவன, அவரை மனதினாலே தியானித்தலும், வாக்கினாலே துதித்தலும், கைகளினாலே பூசித்தலும், கால்களினாலே வலம் வருதலும், தலையினாலே வணங்குதலும், செவிகளினாலே அவருடைய புகழைக் கேட்டலும், கண்களினாலே அவருடைய திருமேனியைத் தரிசித்தலுமாகும்.

அன்பில்லாத வழிபாடு உயிரில்லாத உடம்பு போலும் அன்பாவது தன்னால் விரும்பப்பட்டவரிடத்தே தோன்றும் உள்ள நெகிழ்ச்சியாகும். கடவுளிடத்தே அன்புடைமைக்கு அடையாளங் களாவன, அவருடைய உண்மையை நினைக்குந்தோறும், கேட்குந் தோறும், காணுந்தோறும் தன்வசமழிதலும், மயிர்க்கால்தோறும் திவலை உண்டாகப் புளகங்கொள்ளுதலும், ஆனந்த வருவி பொழிதலும், விம்மலும், நாத்தழுதழுத்தலும், உரை தடுமாறலும், அவரால் விரும்பப் படுபவைகளைச் செய்தலும், வெறுக்கப்படுபவைகளைச் செய்யா தொழிதலும், அவருடைய மெய்யடியார்களைக் காணும் பொழுது கூசாது வணங்குதலும் பிறவுமாகும்.

## முப்பொருள்கள்

சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களைப் பற்றி விரிவாகக் கூறுகின்றன பதி என்பது இறையாகும், பசு என்பது உயிராகும், பாசம் என்பது தளையாகும். இம்மூன்றும் காணப்படும் பொருள் பாசம் என்று சொல்லப்படும் தளை என்ற உலகமேயாகும். காணப்படும் உலகினைக் கொண்டு காணமுடியாத ஏனைய இரண்டு பொருள்களையும் கருதி உணர்தல் வேண்டும். உலகப் பொருள் யாவும் செயற்கையாகிய காரியப் பொருள்களேயாகும். காரியப் பொருள்கள் எதுவும் ஒரு கருத்தா இன்றித்தோன்ற இயலாது. எனவே காணபபடும் உலகினைப் படைத்த கருத்தாவாகிய இறைவன் ஒருவன் உண்டென்பது உறுதி. இவ்வாறு ஒரு கடவுள் ஓர் உலகத்தை உயிர் பொருட்டே படைத்தார் என்பதும் உறுதி. இவை மூன்றில் (இறை, உயிர், உலகம்)எது முன் பின் என்றவினாவிற்கு இடமின்றி மூன்றுமே அநாதி என்னும் சித்தாந்தக் கொள்கை,

"பதி பசு பாசம் எனப் பகர் மூன்றில்
பதியினைப் போற்பசு பாசம் அனாதி" — (திருமூலர்,)

## உயிர்கள்

உயிர்கள் எண்பத்து நான்கு நூறாயிரம் பேதங்களுடையன என்பர் திருஞான சம்பந்தர். இறைவனருளால் இவை அனைத்துமே ஈடேற்றப்படுகின்றன. இவையாவுமே தத்தம் வினைக்கேற்பப் பிறவிகளைப் பெறுகின்றன. "புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமானே" என மணிவாசகர் விளக்கியுள்ளார். உயிர்களைப் பற்றி நிற்கும் அழுக்காகிய மலங்கள் மூன்றாகும். அவை ஆணவம், கன்மம், மாயை என்பனவாகும். இதில் ஆணவமே கொடிய மூலமலமாகக் கருதப் படுன்றகிது' இதனை நீக்கிக்கொள்ளவே பிறவி அமைகிறது.

## உயிரின் மூன்று நிலைகள்

உடலோடு கூடிய உயிர்களுக்கு மூன்று நிலைகள் உள்ளன· உடலைப் பெறுவதற்கு முற்பட்ட நிலைக்குக் கேவல நிலை என்றும் உடல் பெற்று வாழ்கின்ற நிலைக்கு சகலநிலை என்றும், உடல்· பெற்றிருந்தும் பற்றற்ற நிலைக்கு சுத்தநிலை என்றும் கூறுவர்· எனவே உயிர் முறையே கேவலம், சகலம், சுத்தம் என்ற நிலைகளைப் பெற்று உய்திபெற உடம்பு பயனாகின்றது. சகலநிலையில் உயிர்க்கு நனவு, கனவு உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்லென்று ஐந்து நிலைகள் உள்ளன என்று திருமூலர் முதல் கூறிவருகின்றனர்· 'உயிரினை சதசத்து' என்றும், இறையினைச் 'சிவசத்து' என்றும் தளையினைச் 'சடசந்து' என்றும் கூறுவர். இறை அறிவுவடிவானது. தளை அறியாமை வடிவானது உயிரோ அறிவு வடிவான இறையோடு கூடும்போது அறிவு வடிவாகவும், அறிவற்ற தளைகளோடு சேரும்போது அறியாமை வடிவாகவும் நிற்றல் காரணமாகவே உயிர் சதசத்து எனக் கூறப்பட்டது.

